applied for Teachers' Service Registers in time and as the delay on the part of the teachers had to be condoned, the grant for the period from March 1959 to April 1960 has not been disbursed.

(*b*) From March 1959 to April 1960.

(*c*) The previous manager of the school. The question of taking action against him is under consideration.

SRI K. R. VISWANATHAN : இந்தப் பள்ளி அங்கீகாரம் ரத்தாவதற்கு முன், அதில் வேலை செய்த ஆசிரியர்களுக்கு அந்தக் காலவரைக்கு சம்பளம் கொடுக்கப்படவில்லை. இதிலே இருக்கிற புகார் என்னவென்றால் கல்வி அதிகாரிகள் அனாவசியமாக அந்த ஆசிரியர்களிடம் பகைமை கொண்டு அவர்களுக்கு சம்பளம் கொடுக்காமல் காலம் தாழ்த்திக்கொண்டு வருகிறார்கள். 1-3-1959 முதல் 1960-ம் ஆண்டு ஏப்ரல் வரை சம்பளம் கொடுக்கப்படாமல் இருப்பதாகத் தெரிய வருகிறது. உடனடியாக சம்பளம் கொடுப்பதற்கு முக்கியமாக ஜில்லா கல்வி அதிகாரிக்கு உத்தரவு பிறப்பிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The arrears of Government grant due to the Management of the Kattagaram Aided Elementary School for the period from March 1959 to April 1960 have not yet been paid as the teachers have not applied for Teachers' Service Registers in time and as the question of giving condonation for the delay in applying for Teachers' Service Registers was under correspondence and the condonation has since been given. The District Educational Officer will now take necessary action for the payment of grant to the teachers if they are otherwise eligible.

*Drinking water wells*

*434 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வட ஆற்காடு மாவட்டம், போளூர் தலூகா, படைவீடு, மதுரா, துரிஞ்சாபுரம், நம்மியந்தல் கிராமங்களில் குடி தண்ணீர் கிணறுகள் வெட்டும் விஷயம் எந்த நிலையில் உள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The information is being collected and will be placed on the table of the House as soon as possible.

SRI S. M. ANNAMALAI : படைவீடு, மதுரா, துரிஞ்சாபுரம் கிராமத்தில் 52 அடி கிணறு வெட்டுவதைப்பற்றி ஏறத்தாழ 1½ ஆண்டு காலமாக கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறேன். முதல் கேள்விக்கு பதில் சொன்ன பொழுது ரூ. 5,000-க்கு திட்டம் போடப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். மறுபடியும் அதைப்பற்றி இரண்டாவது தடவை கேள்வி கேட்டபொழுது ரூ. 4,400-க்கு திட்டம் போடப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். மறுபடியும் மூன்றாவது தடவை கேள்வி கேட்டபொழுது ரூ. 3,400-க்கு திட்டம் போட்டிருப்பதாக பி.டி.ஓ விடமிருந்து தகவல் வந்திருக்கிறது. ஒவ்வொரு கேள்வி போடப்படும்பொழுதும் திட்டம் குறைந்து கொண்டே போகப்படுமா ? இந்தக் கிணறை வெட்டுவதற்கு சர்க்கார் முன்வரமாட்டார்களா ? ஏன் இவ்வளவு காலதாமதமாகிறது ? ஏன் திட்டத்தின் மதிப்பு குறைக்கப்படுகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்பொழுது இருக்கிற தகவலிலிருந்து சொல்லுகிறேன். பெரிய பெரிய கட்டிடத்திற்குக்கூட எஸ்டிமேட் மாறுவது உண்டு. இப்பொழுது இது "டெக்னிகல் சாங்ஷ

னுக்காக " "பெண்டிங்காக" இருக்கிறது. நம்மியந்தலில் ஏற்கனவே இரண்டு கிணறுகள் இருக்கின்றன. இன்னொரு கிணறு வெட்டுவதற்கு எஸ்டிமேட் தயாராகி இருக்கிறது. டெக்னிகல் சாங்ஷன் கிடைத்ததும் அந்த வேலையும் எடுததுக்கொள்ளப்படும்.

*Minor irrigation schemes*

*435 *Q*—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலூகாவிலே, 1958–1959-ம் வருடங்களிலே பரிசீலனை ((investigation)) செய்யப்பட்ட சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களிலே எந்தெந்த திட்டங்கள் 1960-ம் வருடத்தில் செய்து முடிக்கப்படும்.

THE HON SRI M. BHAKTAVATSALAM : Five schemes have been investigated but none of them is expected to be executed and completed in 1960.

SRI P. G. MANICKAM : பவானி தாலூகாவிலே ஏறக்குறைய 7 திட்டங்கள் சர்க்காராலே பரிசீலனை செய்யப்பட்டு எஸ்டிமேட் போடப்பட்டிருக்கிறது. சுமார் ரூ. 7,78,800 சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக தொகை தேவை என்றும், சுமார் 2,000 ஏக்கர்களுக்கு பாயும் என்றும் திட்டமிடப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டங்களிலே 1960–61-ல் ஏதாவது நிறைவேற்றப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முதலில் கேட்கப்பட்ட கேள்வி 1958–59-ம் வருடங்களிலே பரிசீலனை செய்யப்பட்ட திட்டங்களிலே எந்தெந்த திட்டம் 1960-ம் வருடத்தில் செய்து முடிக்கப்படும் என்பது. அதற்குத் தான் பதில் அளித்தேன் ஐந்து திட்டங்கள் என்று. ஆனால் இந்த ஐந்து திட்டங்களும் 1960-க்குள்ளேயே முடியும் என்று எதிர்பார்ப்பதற்கு இல்லை. மற்ற விவரங்கள் என்னிடம் இல்லை.

SRI P. G. MANICKAM : இந்த ஐந்து திட்டங்கள் எவை எவையென்று அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான்கு திட்டங்கள் எவை என்று நான் சொல்லக்கூடும்.

(i) Harnessing-Kavandapady-Pallam drain in S. No. 894 of Salangapalayam of Bhavani taluk.

(ii) Harnessing the Kavandapady-Pallam drain in S. No. 341 of Salangapalayam village of Bhavani taluk.

(iii) Harnessing the drainage course in S. No. 696 of Periapuliyur village of Bhavani taluk.

(iv) Harnessing the Thayirpalayam drain in S. No. 524 of Periapuliyur village of Bhavani taluk.

மற்றபடி இப்பொழுது பரிசீலனை செய்யப்படுவதெல்லாம் குட்டைகளை சரிப்படுத்துவதுதான்.